[13th February 1959

THE HON. SRI M. A. MANICKAVELU : பைலட் வாட்டர் சப்ளை ஸ்கீமாக இருக்கும். பைப் போடவில்லை இன்னும்.

However, with a view to bring the completed items of work into beneficial use for the public a pilot water-supply scheme was completed and water is now being supplied to Manjakuppam and Pudupalayam area through a net work of public fountains. The real scheme will come later.

*Manufacture of electrical equipment*

* 286 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) மின்சார இயந்திரங்கள், அதன் உறுப்புகள், மின்சாரத்தைப் பரப்ப வேண்டிய சாதாரணங்கள் ஏதேனும் இம்மாநிலத்தில் செய்யப்படுகின்றனவா?

(ஆ) அப்படியானால், அதன் விவரங்கள் என்ன?

(இ) இல்லையானால், இத்துறையில் ஏதேனும் முயற்சி எடுக்க உத்தேசமுண்டா?

(ஈ) அப்படியானால் அதன் விவரம் என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) Yes, Sir.

(ஆ) A statement [a] is placed on the table of the House.

(இ) and (ஈ) Do not arise.

SRI A. VEDARATHNAM : மின்சாரக் கருவிகள் இந்த மாநிலத்திற்கு நம் நாட்டிலிருந்தும் என்னென்ன சாமான்களை தருவிக்கிறார்கள்? வெளி நாட்டிலிருந்து என்னென்ன சாமான்கள் தருவிக்கப்படுகின்றன ? அவற்றை இங்கேயே செய்வதற்கு ஏதாவது திட்டம் உண்டா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : இந்தக் கேள்வியை பார்லிமெண்டில் போட்டால் அவர்களிடம் தகவல் இருக்கிறது, இதற்கு அவர்கள் பதில் சொல்லுவார்கள். அதனால் அங்கே போடும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN : மேஜையின் மீது வைக்கப்பட்டுள்ள லிஸ்டில் கோயம்பத்தூரில் இருக்கக்கூடிய பணக்கார காங்கிரஸ்காரர் நடத்தக் கூடிய இண்டஸ்ட்ரியில் ஸ்டார்ட்டர்கள் போன்றவைகள் தயாரிக்கப்படுவதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆனால் குடியாத்தத்தில் இருக்கக்கூடிய ஏழை காங்கிரஸ்காரர் நடத்தக்கூடிய இண்டஸ்ட்ரியில் ஏராளமான கருவிகள் தயாரிக்கப்படுகின்றன. அங்கே அருமையான ஸ்டார்ட்டர்கள் தயாரிக்கப்படுகின்றன என்று பெரிய அதிகாரிகளும், பெரிய நிபுணர்களும் சொல்லி இருக்கிறார்கள். அவருடைய பெயரை இந்த லிஸ்டில் ஏன் குறிப்பிடவில்லை ? அதற்குக் காரணம் என்ன என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : இதைப்பற்றி தனியாகக் கேள்வி போட்டால் விசாரித்து பதில் சொல்ல முடியும்.

SRI S. M. ANNAMALAI : இந்த மின்சார சாமான்களை உற்பத்தி செய்வதற்கு சர்க்கார் ஏதாவது ஒரு தொழிற்சாலையை ஆரம்பிக்க உத்தேசம் உண்டா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : இப்பொழுது அவசியம் இல்லை. இண்ட்ஸ்ட்ரியல் பாலிஸி தீர்மானம் பிரகாரம் அது தனியார் துறைக்கு ஒதுக்கப்பட்ட விஷயம்.

---

[a] Printed as Appendix I on pages 322–323 infra.

13th February 1959]

SRI K. B. S. MANI : தற்கால உத்தரவுப்படி சிறிய மேக்கர் போன்ற சாமான்கள் உபயோகப்படுத்த வேண்டுமென்று வைத்து இருந்தும் அவைகளுக்கும் லைசென்ஸ் வழங்கப்படும் என்ற உத்தரவும் போடப்பட்டிருக்கிறது. அதனால் மேக்கர் போன்ற டெஸ்ட்பண்ணக்கூடிய சாமான்களும் கிடைப்பது இல்லை. அவைகளை இங்கேயே தயாரிக்க அரசாங்கம் முன் வருமா என்பதை அறிய விரும்புகிறேன். அவைகள் சுலபமாகக் கிடைப்பதற்கும் வழி செய்யப்படுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : தேவைப்படுகிற சாமான்களை உற்பத்திசெய்வதற்கு முதலாளிகள் அக்கறை கொள்ளுவார்கள். லாபம் அதிகமாக வரும் என்று வருவதினால் அவர்களே உற்பத்தி செய்ய முன் வருவார்கள். ஏதாவது சாமான்கள் வேண்டியதாக இருந்தால் அவைகளை உற்பத்தி செய்ய அவர்களே முன் வருவார்கள். தனியார் துறையில் சர்க்கார் என்ன உதவிசெய்ய வேண்டுமென்று கருதுகிறார்களோ அதைச் செய்யும்.

SRI M. P. SUBRAMANIAM : மின்சார விஸ்தரிப்புத் திட்டம் இப்பொழுது பரவலாக எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கும் நேரத்தில் ஸ்டாட்டர்கள், சுவிச்சுகள் போன்ற சாமான்களை ஒன்றுக்கு ஒன்றரை பங்கு கூடுதலாகக் கொடுத்து வாங்க வேண்டியதாக இருக்கிறது. இதைப்பற்றி அரசாங்கத்திற்குத் தெரியுமா ? இங்கே செய்யப்படும் சாமான்கள் போதுமான அளவு இல்லாத காரணத்தால், மேலும் வெளிநாடுகளிலிருந்து போதிய அளவு இறக்குமதி செய்வது இல்லாத காரணத்தால் இந்த சாமான்கள் ப்ளாக் மார்க்கெட்டில் விற்கப்படுகின்றன என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ? ஆகவே இவைகளை போதுமான அளவுக்கு இங்கேயே உற்பத்தி செய்ய தனியார் துறையில் விடுவதற்கு அரசாங்கத்தினிடம் ஏதாவது திட்டம் இருக்கிறதா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : தனியார் துறையில் ஏதாவது திட்டம் ஏற்படுத்த வேண்டும் என்று அவர்கள் கருதினால் சர்க்கார் நிச்சயமாக அதைச் செய்யும்.

*Planting trees on road sides*

* 287 *Q*.—SRI V. ARUNACHALA THEVAR : Will the Hon. the Minister for Public Works be pleased to state the amount spent for planting trees on road sides by the Highways Department, Pudukkottai Division in the Tiruchirappalli district for the years 1957 and 1958?

THE HON. SRI P. KAKKAN : The expenditure on planting avenue trees on Government roads was Rs. 27,813 in 1957 and Rs. 21,306 in 1958 and that on District Board roads was Rs. 13,594 in 1957 and Rs. 11,410 in 1958.

*Community Development Scheme*

* 288 *Q*.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

1958-வது ஆண்டில் வடாற்காடு ஜில்லாவில் எங்கெங்கே சமுதாய அபிவிருத்தித் திட்டம் ஆரம்பிக்கப்பட்டது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : During the year 1958 the following five blocks were launched in the North Arcot district :—

(1) Tirupattur Block,

(2) Wallajah Block,